# நெருஞ்சிப் பழம்




புலவர் குழந்தை





கிடைக்குமிடம்

சிவலிங்க நூற்பதிப்புக் கழகம்

ஈரோடு

# முகவுரை

பழந்தமிழ் மக்கள், தம் வாழ்க்கை முறையை **அகம், புறம்** என இருகூறாகப் பகுத்து, அவ்வாழ்க்கை முறையாகிய உலக வழக்கினைப் புனைந்துரை வகையால் இலக்கிய இலக்கணம் செய்து, அப் புலனெறி வழக்கினைக் கடைப்பிடித்து இனிது வாழ்ந்து வந்தனர்.

அகப்பொருள் – **களவு, கற்பு** என இருவகைப்படும். களவாவது - பருவமுற்ற ஓர் ஆணும் பெண்ணும் தாமே எதிர்ப்பட்டு ஒருவரை யொருவர் காதல் கொள்வது. கற்பாவது - காதல் முதிர்ந்து மணம் செய்து கொண்டு வாழ்க்கை நடத்துவது. இல்வாழ்க்கையாகிய கற்பிற்குக் காரணமான களவே கற்பினும் சிறப்புடையதாகும்.

அக்களவு - இயற்கைப் புணர்ச்சி, இடந்தலைப்பாடு, பாங்கற் கூட்டம், தோழியிற் கூட்டம் என நால் வகைப் படும். தோழியிற் கூட்டம் - மதியுடம்பாடு, குறியிடம், வரைவு கடாதல், அறத்தொடு நிலை என நால் வகைப் படும். களவொழுக்கம் இவ்வாறு பலபடப் புனைந் துரைக்கப்படும். இவற்றின் விரிவை, அகப்பொருள் பற்றிய பழந்தமிழ் இலக்கிய இலக்கணங்களிற் காண்க.

அக் களவொழுக்கத்தை - புனைந்துரை யின்றி, உலகியல் முறையில், பழந்தமிழர் வாழ்க்கை முறையில் வழுவாது, தற்கால வாழ்க்கை முறைக்கேற்ப விளக்கு வதே 'நெருஞ்சிப் பழம்' என்னும் இச்சின்னூல்.

"அனிச்சமும் அன்னத்தின் தூவியும் மாதர்
அடிக்கு **நெருஞ்சிப் பழம்**"

என, வள்ளுவர் கூறிய உவமையை, நெருஞ்சிப் பழங்கள் ஒப்பிட்டுப் பார்ப்பது கருத்தாக இந்நூல் புனைந் துரைக்கப்பட்டுள்ளது.

அன்புயர் **தமிழ்த் தாத்தா கவிமணி** அவர்கட்கு இந்நூல் அன்புத்தொடையல் ஆவதோடு, அப்பெரியார் வாய்மொழிப்படியே தமிழ் மக்கள் 'யார்க்கும் இனிய விருந்தாகி' இன்பம் பயப்பதாக.

பவானி
25—8—54

அன்புள்ள
**குழந்தை**

# வாழ்த்துரை

கவிமணி

**தேசிக விநாயகம் பிள்ளை**

அவர்கள்

---

'கனியும் அன்பால் அரியபல
கவிதந் துள்ளம் கவர்ந்திடுவோன்
புனித தமிழன்' என்றறிஞர்
போற்றும் புலவர் குழந்தைதரும்
இனிய "நெருஞ்சிப் பழம்" உலகில்
யார்க்கும் இனிய விருந்தாகி
நனியெம் இறைவன் அருளாலெந்
நாளும் வாழ்க வாழ்கவே!

---

# நெருஞ்சிப் பழம்

---

## 1. மழைப் பேறு

### நேரிசைக் கலிவெண்பா

வானோக்கி வாழும் வகையொழிய மாநிலத்தைத்
தானோக்கி வாழுந் தகுதியுற — மேனோக்கிப்
பைம்புற் றலைகாட்டப் பட்டிமறிக் குட்டியெலாம்
தெம்புற் றெழுந்து செவியாட்டத் — தம்புற்றை
விட்டகன்று தாய்மை விளக்குவபோற் சிற்றெறும்பு
முட்டைகொண்டு மேலே முனைந்தேறக் — கட்டெறும்பு
6

கூர்த்துப் பகழியன்ன கூர்வாயான் மற்றெறும்பு
பார்த்துப் புழுங்கப் பரித்தேறச் — சீர்த்தமிழ்வாய்
அம்புவிழி யாய்தொடிநல் லார்மென்று துப்பியநற்
றம்பலம்போற் செந்நீர்த் தடம்போலச் — செம்பவள
மாலை யறுந்து மணிசிதறி யூர்வதுபோற்
சாலை யருகினின்மூ தாவூரக் — காலையிலே
12

---

3 மறிக்குட்டி - செம்மறியாட்டுக்குட்டி. 4 தெம்பு- மனத் தெளிவு. 5 தாய்மை - தாயன்பு. 7 கூர்த்துப் பகழி அன்ன - மிகக் கூரிய அம்பு போன்ற. 8 பரித்தல்- சுமத்தல். 10 செந்நீர்த் தடம் - ரத்தக் குளம். 12 மூதா- தம்பலப் பூச்சி.

ஏரிழுக்க வேண்டுமென வெண்ணியிரங் கிப்பகடு
நீரிழுக்க வில்லையென நெஞ்சுவக்கக்—காரொழுக்கங்
கண்டு சொறித்தவளை கத்தவிளஞ் சேறெடுத்து
நண்டு வளையடைக்க நத்தைபிள்ளை—பெண்டுடனே
ஓடிக் குடவளையி னுட்புகுதக் கோலமயில்
ஆடிக் குயிலுக் கசைப்பூட்டப் — பாடினிபோல்

பச்சைக் கிளியழைக்கப் பைங்கட் சிறுபூவை
மெச்சிக் கிளையின் மிசையேற—நச்சி
ஒருநா ளுலகி லுயிர்வாழ்தல் போதும்
இருநா ளிருக்கினிட ரெய்தும்—வருநாளில்
என்றறி விப்பதுபோல் ஈசல் வெளிக்கிளம்ப
நன்றறி தென்றமிழ்நன் னாடதனை—அன்று

குடியி னொருகுடியாய்க் கொண்டாண்ட மூவர்
குடையி னினைவுக் குறியாய்—விடிபொழுதில்
மாட்டுப்பா லுண்டுநில மாதுவெள்ளிக் கிண்ணமதை
மாட்டுப்பால் மேற்கவிழ்த்து வைத்தாற்போல்—
நாட்டுப்பாற்
கொட்டுவெயி லாலெழுந்த கொப்புளம்போலேகாளான்
பொட்டெனவே யெங்கும் புடைக்கநிறம்—
முட்டவொரு

---

13 பகடு - எருது. 14 கார் - மேகம். 18 அசைப் பூட்ட - சொல்ல. 22 இருநாள் இருக்கின் வருநாளில் இடர் எய்தும். ஈசல் ஒரு நாள் வாழ்வுடையது. 28 மாட்டு - மாட்டுதல், மாடு கட்டுந்தறி. மாட்டுப் பால் மேல் - கட்டுத் தறியின் மேல்.

பான்றுபட்டுப் பல்வகைய பட்டுடுத்திப் பாவையரைப்
போன்றுபட்டுப் பூச்சி புறப்படவே—தோன்றுமட்டும்
பாடியொரு கோடியல பார்ப்பிடமெ லாம்வானம்
பாடியொரு கோடி பறந்திடவே—ஆடரவின்
ஆயிரங் காலுடைய அட்டைபுகை வண்டிசெலப்
போயிரங் கானகம் புற்றடைய—ஞாயிறுதன்
36
வெப்பந் தணிய விருந்து மழைக்கீந்து
கைப்பந் தெனமேற் கடலொழிக்கத்—தைப்பொங்கல்
போல வுலகருளம் புத்துணர்ச்சி யானிரம்பக்
காலை யெழுந்ததூஉங் கட்டாயங்—கோலநெடுஞ்
சிற்றி லிழைத்துத் தெருவில்விளை யாடுமெனக்
கொற்றச் சிறுமியருட் கொண்டுவப்பச்—சிற்றில்
42
சிதைத்தாட வாய்த்ததெனச் செல்வச் சிறுவர்
குதித்தோடி யாடிமகிழ் கொள்ள—மதித்தோடிப்
பண்ணடுத்த செந்தமிழ்வாய்ப் பாவையர்க
ளேந்துதொடிக்
கண்ணடுத்த தாமரைச்செங் கையினிற்செம்—
மண்ணெடுத்து
மெய்முழுதும் பூசி விதைக்குடத்துக் கக்குடத்துக்
கய்முழுதுஞ் சுண்ணக் கரைகட்டிச் — செய்முழுதும்
48

---

31 பான்று - பான்மை, தன்மை. 33 ஒரு கோடி - ஒரு பக்கம். 35 புகை வண்டியைப் போலச் செல்ல. 36 இரங்கா - இரங்கி. 41 ஆடும் - ஆடுவம் என்பதன் மரூஉ. 44-45 பண் - இசை. பண் மதித்து ஓடி அடுத்த வாய்-இசையானது அவர்கள் சொல்லினிமையைமதித்து ஓடிச் சென்று அடுத்த வாய். 45 தொடி - வளையல். 47 மெய் - குடத்தின் மேற்புறம். 48 கை - கைப்

வண்டமிழ் வாணர் மனம்போல் விளைகவெனத்
தண்டமிழ் மானவிதை தாமிடவே—கொண்டுவகை
ஏரோர் கலப்பை யெடுத்துத் திருத்திவைக்கப்
பாரோர் வயிற்றுப் பசியகல—நேராக
ஈழமலை யாளத் தெதிர்மின் னதுமின்னி
வேழமலை போலமுகில் மேக்கெழுந்து—ஊழுறவே

குன்றக் குறமகளிர் கோலநெடுந் தோளிலகும்
மன்றற் றெரியலென வாளருவி—சென்றுபுகச்
சிற்றாறு பேராறாய்ச் செல்லத் தமிழ்முழுதுங்
கற்றார் மனம்போலக் காலிறங்கி—வற்றாத
ஏரிகுள மெல்லாமிங் கெப்போது வந்ததுகொல்
வாரிவள மென்னும் வகைநிரம்பப்—போரணிந்த

மூவரசர் தானை முடுகிப் பகைப்புலத்தே
நாவரசர் பாட நடப்பதுபோற்—பாவரசுப்
பள்ளம் படுகையெலாம் பைந்தமிழர் கைவளம்போல்
வெள்ளம் பெருகி விளையாட—வள்ளுவர்வாய்
ஈன்ற குறள்வளம்போ லெங்கும் பெருமகிழ்வு
தோன்ற மழைபொழிந்தது.

---

பிடி, குடத்தின் கழுத்து. சுண்ணம்-சுண்ணாம்பு. விதைக் குடத்துக்குச் செம்மண் பூசிச் சுண்ணாம்புக் கரை கட்டுதல் வழக்கம். செய் - நிலம். 50 மான - போல. 54 வேழமலை - யானை மலை, யானையும் மலையும். ஊழ் - ஒழுங்கு. 56 மன்றல்-மணம், திருமணம். 60 வாரி-கடல். 62 பா-பரவுதல், பரத்தல். அரசு-நாடு. பா அரசு-பரந்த நாடு.

## 2. தலைவி சிறப்பு

மழைபொழிய வானம் வளம்பொழிய வெள்ளம்
முழைபொழிய வெங்கும் முடுகப்—பிழைபொழிய
ஞாலத் துயிர்வாட நற்றமிழ்க்கோன் றீயாதார்
போலத் திகழ்வானம் பொய்த்திட்ட—காலத்தும்
கற்று வெனச்சுரந்து கன்னித் தமிழ்நாட்டை
உற்று ரெனக்கனிவோ டுண்பிக்கும்—வற்றுத

72

பொன்னித் துறையருகே பூவையொடு பைங்கிளியும்
கன்னித் தமிழ்பேசுங் காட்டூரில்—தன்னைத்த
செஞ்சொற் கிளிமொழியார் சேர்ந்துநலம் பாராட்டும்
அஞ்சொற் கிளிமொழிநல் லாளொருத்தி—மஞ்சுமிழும்
மின்னற் கொடியோவம் மின்சாரப் பேரொளியோ
பொன்னிற் கடைந்தெடுத்த பொம்மையோ—
[தன்னுற்றல்

78

அத்தனையுங் காட்டி யழகென்னு மைகொண்டு
கைத்திறனில் வல்லான் கருத்துடனே—யெத்தனைநாள்
தேர்ந்து தெளிந்து செயலு மனமுமொன்ற
ஓர்ந்து புதுக்கியநல் லோவியமோ—தீர்ந்திடாத்
தங்கைப் பொருளைத் தகவுண்பார் போன்மகிழும்
மங்கைப் பருவ வளருருவஞ்—செங்கைக்

84

---

68 முழை - வெடிப்பு. பொழிய - நிறைய. பிழை பொழிய - குற்றம் மிக. மழையின்மையாற் குற்றம் மிக்கதென்க. 76 மஞ்சு - முகில்.

கெதிர்நிற்க மாட்டாமலேதோற்றுத் தானே
வெதிர்புக்கு விட்டதுயர் வெற்பில்—விதிர்விதிர்த்து
நீருளொளித்ததுகாண் நீர்ப்பாசி, நீர்பொழிந்து
காரும் வெளுத்த, கவரிமான்—நேரிழையாள்
கூந்தல்போல் வேறொருத்தி கூந்தலுள தோவெனத்தன்
கூந்தலைவிட் டேதேடுங் கூந்தலாள்—ஏந்திழையாள்
90

வட்டமுகங் கண்டு மதிதேய்ந்த, வாணுதலாற்
கெட்டமதி வட்டமதைக் கிட்டினதால்—எட்டநின்று
பார்த்தெழிலை யப்புருவப் பண்பில்லே மென்றோவில்
போர்த்தொழிலை விட்டொழிந்தே போயிற்றோ—ஈர்த்தொழிலைக்
கய்கழுவி விட்டே கதிர்வேலுங் கூர்வாளும்
பொய்கெழுமி னோர்போலப் போயினதும்—மொய்குவளை
96

சேற்றுட் பதுங்கியதும் செங்கயனீர் மூழ்கியதும்
ஆற்றற் படாதுவிழிக் கஞ்சியோ—ஆற்ற
உகிர்க்கு மிதழுக்கு மொப்பாகே மென்றோ
துகிர்க்கடலுட் புக்கதோ, தோன்ற—நகைக்கினவள்
முன்னிற்க மாட்டாமல் முத்தொளிவெண் பல்லுக்கு
வெந்நுற்று மாக்கடலுள் மேவிற்றோ—இன்னிசையோ
102

---

86 வெதிர் - மூங்கில். விதிர்விதிர்த்து - நடுநடுங்கி. 88-89 கவரிமான் மயிர் கடைகளில் விற்றல் இவள் கூந்தல் போல் வேறொருத்தி கூந்தல் உளதோவெனத் தேடுதல் போன்றது. 91 நுதல் - நெற்றி. 94 ஈர்த்தல் - அறுத்தல், வெட்டுதல். 97 கயல் - கெண்டைமீன். 99 உகிர்- நகம். 100 துகிர் - பவளம். 101 ஒளிமுத்து. 102 வெந்- முதுகு. வெந் உறல் - முதுகு காட்டி யோடுதல், தோற்றல்.

ரேழுங் கலந்தான வின்சொல்லுக் காற்றுமல்
யாழுங் குழலுமிசை யற்றனவோ—யாழொன்றோ
அந்தநாள் போனிறைய வான்பாலுஞ் செந்தேனும்
இந்தநாள் இல்லாமைக் கீதன்றோ—செந்தமிழ்ச்சொற்
போட்டியிட்டுத் தோற்றதனாற் பூவையும் பைங்கிளியும்
வீட்டைவிட்டுக் காட்டகத்தை மேவினவோ—தோட்
டெழிற்கு

வள்ளை யிரங்கிநிற்கும் வள்ளுகிரைக் கண்டுகிளிப்
பிள்ளை குறுகும் பெயர்த்தகலும்—பள்ளவயல்
அன்ன நடைபழகு மாரணங்கு நானிலத்தே
இன்னு மவளழகை யென்சொல்ல—மன்னுமெழில்
ஏந்தி யெழிலுக் கெழிலா யிரும்புலவர்
மோந்து தருமன் மொழித்தொகையாள்—போந்த

அழகு சுமந்திளைத்த வாக்கையாள் காதல்
பழகு தமிழ்மொழிப்பொற் பாவை—ஒழுகுபுனல்
ஓட்டத் திடையி னொளிருங் கதிரொளிபோல்
நாட்டத் திடைக்காதல் நல்குவாள்—ஆட்டத்தின்
கண்ணிகழு முட்குறிபோற் கைவிசிக் கண்ணிமைத்து
வண்ணவுட லவ்வே வளைத்தசைத்துப்—பெண்ணுருவங்

---

104 யாழ் ஒன்றோ-யாழ் மட்டுமா. 108 தோடு-காது. 109 வள்ளை - ஓர் இலை. வள் - கூர்மை. 114 அன்மொழித் தொகையாள் - பொற்றொடி, ஆயிழை, கருங்குழல், துடியிடை போன்ற உடைமைச் சிறப்பினையுடையவள். 118-9 ஆட்டத்தின்கண். உட்குறி - மெய்ப்பாடு (அபிநயம்).

தானோ புனமயிலோ தங்கச் சிலையோவென்
பூணோ டமைந்தவுயி ரோவியமோ—மானோவென்
றையுறவே கண்டோ ரணிதிகழும் பாற்றலைமேற்
பையரவு மண்டலித்த பான்மைபோல்—தையலவள்
துப்புறமுன் றானையினாற் சும்மாடு வைத்ததன்மேல்
எப்புறமுஞ் சாயா திருக்கவொரு—கைப்பிடியா

126

ஆய மணைமே லழகு படவினிது
மேய வடுக்கு மிடாப்போலத்—தூயதமிழ்ச்
சொல்போற் சுவைமிகுந்த சோறுகொண்டு சிற்றிடை
மேற்
கொல்வேற்கண் ணாளோர் குடம்வைத்து—வெல்போர்ப்
படையோடப் போதுகரும் பாம்பெனவே பின்னல்
முடியோடப் போதுசெல முந்த—அடியாதி

132

பாவை முடிகாறும் பார்த்துலகப் பாவையர்தம்
ஆவி யனைய வழகெல்லாம்—மேவியொரு
நல்லுருவ மாகி நனிபெருகி நாணத்தால்
சில்லுருவ மாகியுடன் செல்லுதல்போல்—மெல்லியலை
விட்டகலா தேநீழல் வீறுகொடு பின்செலவே
கட்டழகி கண்ணுங் கருத்துமாய்த்—தொட்ட

138

---

121-2 என்பு – எலும்பு. ஊன் - தசை. 123 ஐம்பால் - மயிர்; ஐந்து வகையாக முடித்தலாற் பெற்ற பெயர். 131 போதுதல் - வருதல். 132 முடியோடு அப்போது செலமுந்த–முன்னோக்கி ஆட.

சிலையுமிழ்ந்த கூர்ங்கணை போற் செம்மாந்து வானத்
தலையுமிழ்ந்த வெள்ள மதனுற்—கலையுமிழ்ந்த
அம்மதிபோற் றேன்று தழிந்த வழிநடந்தாள்
தம்மதிபோற் றேன்றுமிளந் தையலாள்—இம்மெனப்
மானின் விழிமருள வட்ட முகஞ்சுழிக்கத் [பெண்
தேனின் மொழிகுழறச் செந்தளிர்போன்ம்—மேனி
சதைக்க மலரடியில் தைத்ததுவே யுள்ளம்
பதைக்க நெருஞ்சிப் பழம்.

---

## 3. நெருஞ்சிப் பழத்தின் சிறப்பு

நெருஞ்சிப் பழந்தைக்க நின்றிட்டாள் பாவம்!
கருஞ்சிப் பழம்போன்ற கன்னி—அருஞ்செப்பின்
உள்ளெனவே காட்டு முயர்நன் மணம்போலப்
பொள்ளெனவே வேர்வை புறங்காட்டத்—
தெள்ளுதமிழ்ப்
பாவென்று சோலைப் பசுங்கிளியை வென்றகுரல்
ஆவென்று வெய்துறவா யங்காக்கக்—காவென்று

---

139-40 வானத்து அலை. அலை - முகில். கலை - ஒளி. கலையிழந்த உவாமதி, வெள்ளத்தால் அழிந்த தடத்திற்கு உவமை. 142 இம்மென - திடுக்கென. 145 சதைக்க - நடுங்க. 146 நெருஞ்சிப் பழம் - நெருஞ்சி முள். 148 செப்பு - சிமிழ். 152 வெய்துற - துன்புற. அங்காக்க - திறக்க. கா என்று - காப்பாற்றுக என்று.

மெய்யி னிடையியங்கு மின்சாரப் பேருணர்ச்சி
பொய்யி னிடையியங்கும் போதேபோல்—ஒய்யெனவே
முத்து முலகுயிரை முத்தாம லேயியக்கு
வித்து மனத்தகத்தே வீற்றிருக்கும்—புத்துணர்வாம்
156

உள்ளத் தலைவனிட மோடோடிப் போயுரைக்க
எள்ளத் தனைபொழுது மில்லாமல்—உள்ளத்தைத்
தங்கு மொருபேச்சுத் தந்தி யகமாக்கொண்
டெங்கு மிசைத்தேற் றினிதாளும்—அங்கவனும்
அப்பொழுதே யவ்வே யவணிவணே யாமென்ன
இப்பொழுதே போய்க்காத் திடுகென்று—துப்புரவாய்க்
162

கட்டுக் கரும்பனைய கைமலர்க்குக் கட்டளைய
திட்டுத் திரும்ப வெதிர்நோக்க—அட்டியிலை
எந்தங் கடப்பாடு மேயாகு மாறாலும்
இந்த விடத்துதவற் கில்லையே—நொந்துபயன்
இல்லையெம தையன்மீர்! என்செய்கோம் பல்லனைய
முல்லைமலர் மல்லிகையின் முன்மலர—அல்லிமலர்க்
168

காம்பரிந்து தாமரையின் கள்ளுமொரு பாரமெனத்
தாம்பரிந்து வண்டர் தமக்கீந்து—தேம்பரிந்து

---

154 பொய்யினிடை இயங்கும்போது-அப்போதே. ஒய்யென – விரைவாக. 155 முத்துதல் – முதிர்தல், முடிதல். மின்சாரப் பேருணர்ச்சி காவென்று உள்ளத் தலைவனிடம் போயுரைக்க. 160 அவன் - உள்ளத் தலைவன். 162 துப்புரவாய் - நன்ருக. 165 கடப்பாடு - கடமை. 167 ‘ஐயன்மீர்’ என்றது உள்ளத் தலைவனை. 169 காம்பு அரிந்து. காம்பு-பூவின் காம்பு. 170 பரிந்து- இரங்கி, விரும்பி. தேம் - தேன்.

கூட்டுறவு கொண்டலர்ந்த கோங்கொடுசெங் காந்தளிளந்
தோட்டுறவு கொள்ளச் சுரும்புதமிழ்ப்—பாட்டுறவு
மன்னப் பொலியு மருவு மருக்கொழுந்தும்
புன்னைப் புதுமலரும் பொற்புறவே—இன்னுமுள

எல்லா மணமலரு மின்னிலைவே ரத்தனையுங்
கல்லா வறிவுடைய கைவல்லோன்—நல்லாடன்
ஒன்று முறுப்பெல்லா மொன்றுபட்டுச் சென்றுமணந்
துன்று குழலெழிற்கட் டுன்றினவோ—அன்றியுல
கைந்திணையு மொன்ற யரிவை சுரிகுழற்கண்
வந்திணைய நின்று மலர்ந்தனவோ—தந்துணைய

நீர்ப்பூ நிலப்பூ நெடுங்கோட்டுப் பூகொடிப்பூ
மாப்பூ வெனுநால் வகையாய—நார்ப்பூவாம்
பொன்னேர் புதுமலரின் பூந்தொடையோ வல்லாது
தன்னே ரிலாததமிழ்த் தண்ணறுஞ்சீர்ச்—சொன்றுறும்
பாப்பா வினமலரின் பைந்தொடையோ வென்றுவியந்
தேப்பா விதன்பெயரென் னென்றிடவே—யாப்பாரத்

தம்முன் னவர்வழியே தாம்பயின்று தேறியகைக்
கம்முன் னவர்வழியே கட்டிய—நம்முன்னோர்

---

172 தோடு - பூவிதழ். 176 நல்லாள்தன். 177 உறுப்பு எல்லாம் - உறுப்புக்களுக் குவமையான மலர்களெல்லாம். 179 ஐந்திணையும் - முல்லை முதலிய ஐந்நிலப் பூவும். 182 மாப்பூ-சிறந்த பூ. 185 பாப்பா இனம் - பாவும் பாவினமும். 186 யாப்பார - நன்றாக. 188 கம் - தொழில். நன்கு பழகிய கைவல்லோன் கட்டிய கதம்பம்.

கண்டறியா மாலைக் கதம்பமணிந் தேகமழ
வண்டறியா நெய்தடவி வார்ந்தடர்ந்தே—உண்டறியா
ஐம்பா லெனும்பெயர்பெற் றாயிழைதன் பேரழகின்
செம்பால்யா னென்று செருக்குற்று— வம்பாலும்

192

ஊட்டு புகையாலு மூட்டமுற்று மெய்பொருமிச்
சூட்டு வகையாற் சுரிபட்டு—நாட்டுவமை
இல்லையெனச் செம்மாந் திருண்ட கருங்குழலும்
செல்லுமென நாட்டகத்தே தேடியதை—நில்லுமென
வைத்துச் சுமையடையை வைத்தாள் எடுத்தடுக்கிப்
பத்துக் கரைச்சோற்றுப் பானையின்மேல்—வைத்த
வுடன்

198

சாயாம லவ்வடுக்கைத் தான்பிடித்து ளேன் றலைவ!
ஓயாம லென்ற னுயிர்த்தோழன்—நீயாமல்

---

189 கதம்ப·மாலை. 167 'பல்லணைய' என்பது முதல் 189 'கதம்பம்' என்பது வரை கதம்பத்தின் சிறப்பு. முன்னோர் கண்டறியாமை - கதம்பம் என்னும் பெயர் முன்பின்மை. 190 வார்ந்து - நீண்டு. உண்டறியா ஐம்பால் - கூந்தல். 192 செம்பால் – சரிபாதி; அழகின் சரிபாதி. வம்பு - மணம். 193 ஊட்டம் - செழிப்பு. 'மெய்' என்றது மயிரை. பொருமி - பருத்து. 194 நாட்டு உவமை - ஒப்பிட்டுக் காட்டக்கூடிய உவமை. 197 சுமையடை – சும்மாடு. கருங்குழல் உவமை தேடி நாட்டகத்தே செல்லுமெனச் சுமையடையை வைத்து. 198 பத்துக்கு அரை - ஐந்து, பல. 199 'தலைவ' என்றது உள்ளத் தலைவனை. 190–5 கூந்தலின் சிறப்பு. 200 உயிர்த் தோழன் – மற்றொருகை. நீயாமல் - நீங்காமல்.

மங்கையவள் மெல்லிடைமேல் வைத்தகழு நீர்க்
குடத்தை
அங்ஙனமே தாங்கியுளா ளுகையினுல்—எங்களைநீர்
நம்பிப் பயனில்லை நான்சொல்வ துண்மையெமை
வெம்பிப் பயனிலையான் விட்டேனேல்—கொம்பனையாள்
204

கூந்தல் மகிழ்கூரக் குப்புறமண் வாய்க்கொள்ள
வீழ்ந்து விடுஞ்சோறு வீணுக—ஓர்ந்திடுக
இவ்வளவு தான்சோ றிருந்ததிவள் கண்காண
அவ்வளவு நானேதா னள்ளியிட்டேன்—எவ்வளவும்
இல்லையினிச் சட்டியிலே ஏருழுவோர் பார்த்திருப்பர்
தொல்லையினித் தானிரவுஞ் சோறில்லை—நல்லையினி
210

ஆடிக்கை வீசி யசைந்தங்கு மிங்குமாய்
வேடிக்கை பார்த்துடைத்து விட்டாயே—வாடிக்கை
யாக வருந்தடத்தி லங்கேது முட்டுக்கல்
காக மெனநிமிர்ந்து கண்டாயோ—பாகுமொழி!
உன்கண்ணைப் போல வுகளுங் குறுமுயல்தான்
புன்கண்ணைச் செய்தோடிப் போயிற்றே—வன்கண்ண
216

நாய்கண்டு குள்ள நரியோடிற் றேவறண்ட
காய்கண்டு செம்போத்துக் கத்திற்றே—தாய்கண்டு
பிள்ளை யணிலெழுந்து பேசிற்றே வாய்பவளக்
கிள்ளை யினியதமிழ் கேட்டதோ—பொள்ளெனமுன்

---

208 எவ்வளவும்,—கொஞ்சங்கூட. 210 தொல்லை - துன்பம். இனி இரவும் சோறில்லை. தான் – அசை. 215 உகளுதல் - தாவுதல். 216 புன்கண் - துன்பம். 219 அணிற் பிள்ளை.

மாடோட்டிச் செல்வோனின் வாயினிசை கேட்டிருகண்
பாடோட்டி யேமாந்து பார்த்தனவோ—கேடோட்டி
222

நல்லனசெய் வாரென்று நாட்டுமக்கள் தேர்ந்தெடுக்க
அல்லனசெய் தேயலேக்கு மாள்வார்போல்—தொல்லுல
கில்
என்று மிலாததினி யெப்போது மில்லாத
பொன்று முலகமெனும் பொல்லாத—நன்றறியாப்
பாழும் படியரிசிப் பஞ்சமிதிற் பாத்துண்டு
வாழும் படியரிசி வாங்கவுண்டோ—கூழுங்
228

குடியா திராத்தூக்கங் கொள்ளாது போழ்து
விடியா ததைமறந்து விட்டாய்—வடியாது
மண்ணுக் கிரையாக்கி வந்தனேயே யெம்வயிற்றைப்
புண்ணுக் கிரையாக்கிப் போட்டென்று—கண்ணுக்குள்
ஊசிவிட்டு வாங்குதல்போ லும்மொடுவண் டேழிசை
யும்
பேசிவிட்டு நீங்குதல்போற் பேதுற்று—மூசிநட்டும்
234

---

222 பாடு ஓட்டி – பெருமையை விட்டு. கேடு ஓட்டி - குறைகளேப் போக்கி. 227 பாத்து - பகுத்து. 230 வடித்தல் – சோறு போடுதல். 210 'நல்லே' என்பது முதல் 232 'புண்ணுக் கிரையாக்கிப் போட்டு' என்பது வரை தந்தை கூற்று. இரையாக்கிப் போட்டு வந்தனேயே எனக் கூட்டுக. 233 'உம்' என்றது உள்ளத் தலைவனே. 234 பேதுற்று – வருத்தமுற்று. மூசி - மொய்த்து. நடுதல் - நட்புக் கொள்ளுதல்.

மட்டுவார் பூங்குழலை வாய்வலிக்க வேதந்தை
திட்டுவார் நான்விடுதல் செய்யேனுற்—கிட்டுவார்
யாரேனு முண்டே லழைக்கும் படிசொல்க
சாரேனு மின்பத் தமிழ்வாய்க்கு—நீரேனும்
வேறுவழி செய்கவென மென்கரும்புக் கைவிரித்துக்
கூறுகிற போதக் கொடியிடையாள்—ஏறுறுகண்

நீர்மல்க வாம்பல் நெகிழமுத்துச் செம்பவளப்
போர்மல்க வுள்ளம் புகைமல்கக்—கார்மல்கு
மின்னற் கொடிபோன்ற மெல்லிடைமெய் தாங்காது
பின்னற் கொடிபோன்று பேதுறவே—அன்னதுமெய்ப்
பாடுற்று மேனி பசந்துமயிர்க் கூச்செறிய
மூடுற்ற வேர்வை முகமுற்றத்—தோடுற்ற

வள்ளை நெகிழ வளைநெகிழ மேனியெழிற்
கொள்ளை கொடுத்துக் குறுகுறுப்பப்—பொள்ளெனவே

---

235 மட்டு - தேன். வார் - நீண்ட. கண்ணுக்குள் ஊசிவிட்டு வாங்குதல் போல் உம்மையும் இவளையும் தந்தை திட்டுவார். மூசி நட்டும் வண்டு ஏழிசையும் பேசிவிட்டுப் பேதுற்று நீங்குதல் போல் நான்விடுதல் செய்யேன். 238 சார் ஏனும் - பழச்சாறு போலும். சார்-சாரம்-வடித்தெடுத்தது. 164 'அட்டியிலை' என்பது முதல் 239 'வேறு வழிசெய்க' என்பது வரை கையின் கூற்று. 240 ஏறு - உயரம், பெரிது. 241 ஆம்பல் - ஆம்பல் மலர் போன்ற வாய். முத்து-பல். பவளம் - இதழ். முத்து செம்பவளப் போர்மல்க - இதழைக் கடிக்க. 244 மெய்ப் பாடுற்று – உடம்பின் கண் வெளிப்பட்டு. 246 முற்ற-நிரம்ப.

உள்ள நெகிழ வுடனெகிழ வேநெகிழ்ந்த
கள்ளவிழு மைம்பாற் கருங்கூந்தல்—உள்ளவெலாம்
கண்களவு போகியவக் காலையவன் கைதீண்டப்
பெண்களவு போகியவப் பெட்பேபோல்—உண்களவு
252

பெய்வ தறியாவப் பேதை யுடைநெகிழச்
செய்வ தறியாத் திகைப்புற்றுப்—பெய்வளையும்
செந்தா மரைமலரைத் தேய்த்துத்தேய்த் துப்பார்த்தாள்
அந்தோ ! வவள்மெல் லடியழகை—நந்தா
வதற்குள்ளே பார்த்தமைய லாமோ வடடா !
இதற்குள்ளே யென்ன விவளுக்—கெதற்குமே
258

யின்னுஞ் சிறுபோ திருப்போ மெனவெண்ணிப்
பொன்னஞ் சிலையனையாள் பொன்னடியைத்—துன்னி
விட்டுப் பிரியமன மில்லாம லன்னவையும் [யதும்
மட்டுப் பெரியதமிழ் வண்டினங்கள்—சட்டெனவுட்
போத மலரனிச்சப் பூவுமனத் தூவியுநல்
மாத ரடிக்குநமை மானுமென—ஓதுதிரு
264

---

250-1 உள்ளவெலாம் கண்களவு போகிய அக்காலை- இயற்கைப்புணர்ச்சியின்போது; அதாவது முதன்முதல் இருவரும் சந்தித்த போது. 252 பெண் - பெண்மை. பெட்பு-தன்மை, விதம். உண்கு அளவு பெய்வது அறியா -உண்ணும் அளவு சோறு போட்டுக் கொள்ளுதலை அறியாத, இது குறிப்பு. 255 செந்தாமரை மலர் - அடி. 256 நந்தா-குறையாத. நந்தாஅடி யழகை. 260 துன்னுதல் – பொருந்துதல், தைத்தல். 261 அன்னவை –நெருஞ்சி முட்கள். 262 மட்டு-தேன். தேன்போன்ற தமிழ் பாடும் வண்டினம்.

வள்ளுவர் வாய்மொழியை வாய்மையுட னாராய்ந்து
கொள்ளுவர் போலக் குணமுழுதும்—உள்ளபடி
கண்டறிவா மென்று கழறவொன்று மற்றவையுங்
கண்டறிவா மென்றுசொலிக் கால்கொள்ள—ஒண்டொ
இப்படியே தானே வெனவேங்கி யோயாமல் [டியும்
அப்படியே போலவிருந் தாள்.

270

## 4. தலைவி தூதுவிடல்

### முயற்சி

அப்படியே போலவிருந் தாளவ் விடத்தினிலே
செப்படியே நன்கூறுந் தேமொழியுந்—தப்படியே
செய்தும் பயனில்லை தேய்த்தும் பயனில்லை
வய்தும் பயனில்லை வாய்நோக—நெய்து
பழகு பவள்போலப் பாடகங்கால் நீவி
அழகு சுமந்திளைத்த வன்னே !—கழலணிந்து

276

---

265 வள்ளுவர் வாய்மொழி - "அனிச்சமும் அன்னத்தின் தூவியும் மாதர் அடிக்கு நெருஞ்சிப் பழம்" (குறள் 1120). 266 குணம் - அடியின் தன்மை. 267 ஒன்று - ஒரு நெருஞ்சி முள். 268 கால்கொள்ளுதல்— தொடங்குதல், காலைப் பற்றிக் கொள்ளுதல். 256 'அந்தோ' என்பது முதல் 268 'கண்டறிவாம்' என்பது வரை நெருஞ்சிப் பழத்தின் கூற்று. 272 செப்பு அடியே - சொல்லி னிடத்து, பேசும்போது. தப்படி - கால் மாற்றி மிதித்தல். 275 பாடகம் - ஒரு வகைக் காலணி. நீவி—தடவி. 276 கழல் - செருப்பு.

கொள்ளெனயா னெவ்வளவோ கூறியுங்கேட் டில்லை
யெனப்
பொள்ளெனவாய் விட்டுப் புலம்பவே—தெள்ளுதமிழ்க்
கட்டி யெனப்பாடுங் காரிகையுங் காலினிசைப்
பெட்டி யினைப்பாடப் பேணினுள்—தொட்டிலிலே
தாலாட்ட வாய்தமிழைத் தான்கேட்டுப் பைங்குழவி
காலாட்ட மாட்டுங் கலைபயின்ருள்—நூலேட்டுப்

282

பாட்டின் பொருள்விளங்கப் பாங்கொடுமெய்ப்
பாடுறவே
ஆட்டம் பயிலுமயி லாமெனமேல்—நாட்டினரும்
பண்டறியா தொன்றலவிப் பாருலகை யாட்டிவைக்கக்
கண்டறியா கண்டறியிக் காலையினுங்—கண்டறியா
தெண்மிதித்துப் புக்கயனின் றேக்கறுக்க மட்கலஞ்செய்
மண்மிதித்துப் பக்குவஞ்செய் வாள்போலப்—பண்
[மிதித்துப்

288

---

278புலம்ப - ஒலிக்க. 278-8 பாடகம் காலை நீவி என் பேச்சைக் கேட்கவில்லை என வாய்விட்டுப் புலம் பிற்று. 279 கட்டி – கற்கண்டு. இசைப் பெட்டி - ஆர் மோனியம். 281 ஆய்-தாய். 282 நூல் ஏடு - நூலாகிய ஏடு. 286 கண்டறியா கண்டறிதல் - விஞ்ஞான ஆராய்ச்சியால் புதியன கண்டுபிடித்தல். 287 எண் மிதித்து - எண்ணத்தைத் தாழ்த்தி. ஏக்கறுதல் - ஆசையால் தாழ்ந்து நிற்றல். மட்கலஞ் செய்தல் தமிழர்க்குரிய சிறப்புத் தொழில்களில் ஒன்ருகும். 288 பண் மிதித்து - இசையைத் தாழப்பண்ணி.

பாட்டிசைக்குஞ் செந்துவர்வாய்ப் பைங்கிளியும் பாய் [பரிபோ
லாட்டிசைக்குஞ் சிற்றிளைஞ ராயினள்—காட்டு
வெதிர்மிதிக்கு மென்கையினள் வெய்துயிர்த்துக் கம்மங்
கதிர்மிதிக்கும் பாவையைவெங் கண்டாள்—அதிர் [மிதிக்கும்
நல்லா ரெவருமிந்த நாட்டிலிலை யோவன்றி
எல்லாரும் வேற்றுநா டேகினரோ—பொல்லாத
காலமென்று நீங்காத கையா றிடையழுந்தி
மேலெழமாட் டாதோர் விளம்புவது—ஞாலமதில்
என்போல நீங்கா தினைக்குமிரும் பேரிடுக்கண்
தன்பா லகப்பட்டோர் சாற்றுவதாம்;—மின்போலத்

எறும்பு

தங்காம லோரிடத்துத் தாளாள ரெல்லோரும்
மங்காம லுங்களிடம் வந்தடுத்து—நுங்காதல்
தீராத மாணிகளாய்த் தெள்ளத் தெளியவகம்
ஆராத வார்வமுட னங்நின்று—வாராத
எல்லா மொருங்குவர வேசறக்கற் றுத்தெளிந்து
வல்லா ரெனப்பெரும்பேர் வாங்கினுஞ்—செல்லாத

---

289 பரி-குதிரை. குதிரைபோல மரக்குதிரை யோட்டுதல். 292 அதிர்மிதிக்கும் - நடுக்கத்தைப் போக்கும். 295 கையாறு – துன்பம். 297 இனைக்கும் - வருத்தும். 'பொல்லாத காலம்' என்பது, மீளாத துன்ப முற்றவர் சொல்வதே யாகும். 299 தாளாளர் - முயற்சி யுடையோர். 300 மங்காமல் - மனங் கூசாமல். 301 மாணி - மாணவன். 302 அங்நின்று - உள்ளார்முன் இல்லார்போல் ஏக்கற்று நின்று. 303 ஏசு அற - குற்றமற.

செப்புக்கா சென்னச் சிறுமைப் படவுயர்ந்த
ஓப்புக்கா சில்லா துயர்புலவர்—மெய்ப்புக்கா
306
சென்னவரும் பாவகத்து மேற்ற சுறுசுறுப்புக்
குன்னவரும் பேருவமைக் குள்பொருளாய்—மன்னி
வரும்
**சிற்றெறும்பே!** நுங்களுக்குச் சேரும் பெரியபுகழ்
மற்றெறும்பே போலாது மாநிலத்துப்—புற்றெறும்பே
யென்ன மதியா திருப்ப வரையொன்றோ
தன்னைமதி யாச்சோம்பர் தங்களையும்—இன்னினியே
312
எம்பெருமை யீதெனவு மேற்ற சுறுசுறுப்புந்
தெம்புமுற வுங்கடித்துச் செப்புதல்போல்—நம்புகிறேன்
என்கரும்புக் கைகூப்ப வேலா நிலையுடையேன்
புன்கரும்புக் கோநீவிர் போதுவீர்—மென்கரும்புக்
கோரா யிரத்ததிக முள்ளவென துள்ளன்பை
நீரா யிரத்ததிக நேரினுந்—தாராள
318

---

306 ஒப்புக்கு - உவமைக்கு. ஆசு-குற்றம். 306-7 மெய் புக்கு ஆசு என்ன வரும் - மனத்துட் புகுந்து ஆசுகவி என்று வெளிப்படுகின்ற. 308 உன்ன - நினைக்க. மன்னி-நிலைபெற்று. 311 ஒன்றோ - மட்டுமோ. 312 இன்னினியே - இப்போதே. மதியாதவர்க்குத் தம் பெருமையை உணர்த்தவும், சோம்பர்க்குச் சுறுசுறுப்பும் தெம்பும் உண்டாகவும் எறும்பு கடிக்கும். 314 நம்புகிறேன்—உங்களையே உறுதியாக நம்புகிறேன். 316 புன் கரும்புக்கோ நீவிர் போதுவீர் - புல்லிய கரும்புக்கும் நீங்கள் வருவீர்கள்; கரும்பல்லாத என்கையையோ நீர் விரும்புவீர் ; இது சிலேடை.

*மாய்த்தந்தேன் யாரேனு மங்குசெலி னன்புடனீர்*
*போய்த்தந்து பேரிடுக்கண் போக்குவீர்; — தோய்த்*
*[தந்தப்*

**பட்டுப் பூச்சி**

*பல்வகைய சாயமதிற் பார்த்துப்பார்த் தேயவகை*
*நல்வகைய தாயமைய நன்கமைத்துத்—தொல்வகைய*
*புத்தம் புதுமையுடன் பொற்புறவே நெய்தாலும்*
*ஒத்தம் பலமுவப்ப வுங்களுடை—தத்தம்*

*இயற்கை படவமைந்த வேபோல வெங்கள்*
*செயற்கை யுடையாமோ தேரின்—முயற்கையுடற்*
*பாய்ச்சியோ யாது பறந்து செலும்***பட்டுப்**
**பூச்சிகாள்!** *நீர்போம் புதுவழியில்—நேர்ச்சியுடன்*
*தென்பட்டால் யாரேனுஞ் செம்மையுடன் றப்பாமல்*
*அன்பிட்டுப் பேருதவி யாக்குவீர்—நும்பட்டைப்*

---

*320 போய்த்தந்து - சென்று அழைத்துக் கொண்டு வந்து. 320-1 அந்தப் பல்வகைய சாயமதில் தோய்த்து. ஏயவகை - பொருந்தியவகை. 322-3 தொல்வகைய புத்தம் புதுமையுடன் பொற்புற - பழைய வகைகளும் புதிய வகைகளும் ஒன்றாக அமைந்து அழகுற. 324 அம்பலம் - கூட்டம். அம்பலம் ஒத்து உவப்ப - பலரும் உடன்பட்டு மகிழ. பலருங் கண்டு மகிழும் உங்கள் இயற்கை யுடைபோல எங்கள் செயற்கையுடை அழகுடைய தாகுமோ? 326 முயற்கை - முயற்சி. 328 நேர்ச்சி - அன்பு. 330 அன்பு இட்டு அன்புடன் அழைத்து வந்து.*

போன்றுடுத்து மாநிலத்தும் பொற்பின் றகைமைக்குச்
சான்றடுத்து நிற்குமெமைத் தானிணையும்—ஈன்றெடுத்த
தாயன்றோ நீரெமக்குச் சார்ந்த வுடையமைப்பிற்
சேயன்றோ யாமுமக்குச் செப்புவதும்—வாயன்றோ
எம்முன்னோ ருந்த மியற்கையுடை யைக்கொண்டே
அம்முன்னோர் தம்முடையை யாக்கியதும்—
நம்முன்னோர்

336

கொண்டவியற் கைசெயற்கைக் கூறுமுரண் பட்டாலும்
உண்டவினத் தாலுடைய வொற்றுமையைக்—கண்டு
ராயினமக் குள்ளவுற வாய்சே யெனத்தெரிவீர் [ணர்வீ
தாயுதவல் சேய்க்குமுறை தானன்றோ; ஞாயொருநாட்

**காக்கை**

கய்ம்முறுக்குச் சுட்டெனது கையிற் கொடுத்தகல
மெய்ம்முறுக்குப் பொய்படவவ் வேளையிலே—செய்ம்
முறுக்குப்

342

பொய்யாக்கி நீபிடுங்கிப் போகவொன்றுஞ் செய்யாமல்
எய்யாக்கி யானிருக்க வில்லையா—மெய்யாக்கி
வைக்கவெனக் குச்சான்று வண்டிவண்டி யாகவுள
கைக்கவுனக் குச்சொலுவேன் காதலுடன்—தைக்க
வுளங்

---

337 இயற்கை செயற்கை - முரண்தொடை. 338 இனம் - உடை என்னும் இனம். 340 சேய்க்குத் தாயுதவல் முறையன்றோ. ஞாய்-தாய். 342 முறுக்கு - வலிமை. 344 எய்யாக்கி - சும்மா, துன்பத்தைப் பொறுத்துக் கொண்டு. 346 கைக்க - மிக.

கேட்பாய் கருத்துடனங் கேண்மையதை நிற்கியா
நாட்போ யொழித்ததொரு நாளுண்டோ—வாட்போரில்

வல்லான் வரக்கரையாய் வட்டிலிற்சோ றிட்டினிய
நல்லான் றனிப்பாலில் நான்றருவேன்—வல்லேயென்
றன்பா யுணைப்பாடி யப்பெயர்பெற் ருடனது
பின்பா யவளன்றே பெண்டிரலான்—முன்பேயும்
எவ்வா டவருன்றன் ஏற்றமதை யாற்றலுடன்
செவ்வே யெடுத்தினிது செப்பினவர்—எவ்வாறும்

என்றனதுபே ரிடர்நீக்கி யேகாத்தல்
நின்றனதுபேர் நினதாகும்—உன்றனது
பேரின் பொருட்கொன்றும் பீழையதுண் டாகாமற்
காரின் கறுத்தகருங் **காக்கையே!**—சீருடனே
நின்னினத்தைக் கூட்டியுணு நீர்மைப் பயிற்சியினல்
என்னினத்தைக் கூட்டவுனக் கேலுமால்—
தன்னினத்துக்

---

349-50 ஆன்-மாடு. வட்டிலில் நல்ஆன் இனிய தனிப் பாலில் சோறு இட்டு நான் தருவேன். வாட்போரில் வல்லான் வல்லே வரக் கரையாய். வல்லே - விரைவில். 351 உணைப் பாடி அப்பெயர் பெற்ருள் - காக்கை பாடினியார். பெற்ருள் தனது பின்பாயவள் - அவள் மரபில் வந்தவள். 356 நின்றனதுபேர் நினதாகும் - காக்கை - காத்தல். 357 உன்றனது பேரின் பொருள் - காக்கை - காத்தல். பீழை - குற்றம். 359 நீர்மை- தன்மை. 360 ஏலும் - கூடும், இயலும்.

கன்னி யொருத்தியென்ற‌ற் கட்டாயங் தட்டார்கள்
பொன்னி யுனக்கும் புகழுண்டாம்—இன்னினியே
யாரா யினுமொருவர்க் கன்பா யுரைத்தழைத்து
வாரா யெனவந்து வாழ்விப்பாய்;—தீராத

**கிளி**

துன்ப மெனத்தேனுஞ் சொல்லளவி லேயகற்றி
யின்ப மிகவகத்தே யெய்துவிக்கும்—அன்புருவ

366

மாக்கு மினிக்கு மவிர்க்கு மகத்திருளைப்
போக்கு முளத்தைப் புதுப்பிக்கும்—யார்க்கும்
எளிய வினிய வியல்ப வகலா
வொளிய விணையி லுலகில்—தெளிவுடைய
அய்வகைய முக்கூற்ற வாறுடல வேழ்திணைய
மெய்வகைய மென்மையினு மென்மையதா—முய்
வகையின்

372

மேய பொருளெல்லா மேம்பட்டுப் பிள்ளைபல
வாய விவள்கன்னி யாமென்னத்—தூய

---

362 பொன் - இரும்பு, கறுப்பு. பொன்னி - கரு நிறமுடைய காக்கை. 365 சொல் அளவில் - சொன்ன மாத்திரத்தில். 367 அவிர்க்கும் - விளங்கச் செய்யும். 368 யார்க்கும் - வேற்று மொழியார்க்கும். 371 ஐவகைய - எழுத்துச் சொற்பொருள் யாப்பணி. முக்கூற்ற - இய லிசை நாடகம். ஆறுடல் - எழுத்தசை சீர்தளை அடிதொடை. ஏழ்திணைய - முல்லை குறிஞ்சி மருதம் நெய்தல் பாலை கைக்கிளை பெருந்திணை. புறத் திணை யேழுங் கொள்க. 373 பிள்ளை பல - கன்னடம் தெலுங்கு மலையாளம் முதலியன.

வழிநில்லார் புல்லாத மாண்பும், பழமை
யொழிநில்லார் புல்லா வுலக—மொழிநல்லார்
எல்லார்க்கு மூத்த விளைய தமிழணங்கை
யல்லார்க்கி யாமுரைப்பே மல்லேமால்—சொல்
லோர்க்குங்

378

கிள்ளையென வேனென்று கேட்கும் பசியகிளிப்
பிள்ளையென நாவலர்கள் பேசுவதும்—உள்ளபடி
மெய்யானல் யானுன்னை வேண்டு வதுகேட்பாய்
பொய்யானற் கேளாது போவெழுந்து—செய்யாத
தொன்றல்ல, வென்பேச்சுக் குன்பேச் சினையுவமை
யின்றல்ல வென்று மியம்புவர்—அன்றியுநின்

384

செம்முகத்தைக் கண்டலவோ சேயிழையார்
செம்பஞ்சால்
தம்முகத்தைக் கால்கைத் தளிருகிரை—அம்முகத்தைப்

---

375 புல்லா - புல்லாத, பொருந்ாத. 376 பழமை ஒழிநில்லார் புல்லா - பழமையை ஒழித்து நில்லாதவர் பொருந்தாத. அதாவது புதுமை யுடையார் பொருந்து கின்ற உலகமொழி. உலக மொழிகள் அனைத்தும் தமிழ்மொழிக்குப் பிற்பட்டவை என்பதாம். 365-77 தமிழின் சிறப்பு. 378 அல்லார்க்கு - வேறு பறவை களுக்கு. ஓர்த்தல் - கேட்டல். 382 செய்யாதது ஒன்றன்று - நான் சொல்வது உன்னல் செய்ய முடியாத தொரு காரியமன்று. 386 உகிர் - நகம்.

போலாக்கிக் கொண்டார்கள் பொற்பெனவே யீதுநினை
மேலாக்கிக் கொண்ட மிகையன்றோ—நூலாக்கி
நின்னையதிற் றூதாக நேர்ந்து செயல்கொண்ட
அன்னவரில் யாரொருத்தி யல்லளோ—அன்னதுதான்

இப்போது வேண்டுவது மென்மென் மொழிக்**கிள்ளாய்!**
எப்போதும் யான்மறவே னிந்நன்றி—தப்பாது
பாரா துடல்வருத்தம் பட்டெனவே நீயோடி
வாரா தவரேனும் வாவென்று—யாரா
வதொருவ ரையழைத்து வாராய் விரைவில்
இதொருவர் செய்யுதவிக் கீடோ—அதொருவர்

உன்சொல்லைக் கேட்டாலோ வொன்றுந் தடைசொல்லார்
என்சொல்லைக் கேட்டால்நீ யேகுவாய்—தென்சொல்லைத்
தட்டுவா ரிங்கொருவர் தானுண்டோ நின்மழலை
மட்டுவா ருங்கடக்க மாட்டுவரோ—இட்டுவா
போப்போ வினிப்போது போக்காதே மற்றவரைக்
காப்போர் செயலைக் கடைப்பிடிப்பாய்—திப்போற்

---

387 பொற்பு-அழகு. உன் முகத்தைப் போல் இதழ் கை கால் நகங்களைச் சிவப்பாக்கிக் கொள்ளுதல் அழகுடைத்தென அவ்வாருக்கிக் கொண்டனர். 388 ஈது நினை மேலாக்கிக் கொண்ட மிகை அன்றோ – இது உன்னைப் பெருமைப் படுத்தியதாகுமல்லவா? 388-9 நூலாக்கி... தூதாகச் செயல் கொள்ளல் - கிள்ளைவிடு தூது. 390 அன்னது - தூது. 396 அதுவும் ஒருவர்; உம் தொக்கது. 398 தென் சொல் - தமிழ். 399-400 மட்டுவாரும் நின் மழலை - தேனொழுகுகின்ற உன் மழலைச் சொல்

சுடுசொற் கலவாது தூய்மையொடு வாய்மைப்
படுசொற் கடையினிமை பாய்ந்தால்—தடுசொல்லைக்
காண முடியாது கட்டாயங் கேட்டிடுவர்
கோண முடியாது கோக்கிள்ளாய்! பேணியிதைச்
செய்யெவருங் கேளாரேற் றேன்போற் றமிழிசையைப்
பெய்யவர்தங் காதிற் பிழையின்றி—வெய்யவருங்
408

கட்டுப் படுவார் கடிதேசெல் வாய்சென்று
தட்டுப் படுவாரைத் தானழைத்துச்—சட்டெனவே
வாவென்று தேமொழியும் வண்டமிழின் பைங்கிளியைப்
போவென்று மேதாது போக்கினுள்—ஆவென்று
வாய்திறந்தாள் 'அக்கக்கா வா' வென்ற வக்கிளியும்
ஆய்திறந்தாள் உள்ளமுவந் தாள்.
414

---

403 வாய்மைப் படுசொற்கடை - உண்மைச் சொல்லின் கண். 404 தடுசொல் - தட்டிச் சொல்லுஞ் சொல். 406 கோண - மாறுபட. 408 பெய்தல் - ஊற்றுதல். 412 ஆ என்று - காலில் முள் தைத்ததால் 'ஆ' என்ருள். ஆ—மாடு. மாடு வருகிறது என்ருள்; சிலேடை. அக் கிளியும் 'அக்கக்கா வா' என்றது—மரக்கிளையிலிருந்த கிளி, தலைவன் மாடோட்டி வருதலைக் கண்டு, 'அக்கக் கா வா' என்றது. அக்கக்கா என்பது கிளிப்பேச்சு. 414 ஆய்திறந்தாள் - ஆராய்ச்சியைத் திறந்தாள்; நன்கு ஆராய்ந்தாள். அதுகேட்ட தலைவி மாடுகள் வருவ தையும் கிளியின் சொல்லையும் ஆராய்ந்து பார்த்துத் தலைவன் வருகிருனென்பதை அறிந்து மனமகிழ்ந்தாள். தலைவிக்கு மாடுகளின் அடையாளமும் தெரியுமல்லவா?

## 5. தலைவன் சிறப்பு

உள்ள முவந்தாள் ஒருவனை யன்றொருநாட்
கள்ள முவந்த கருங்கண்ணாள்—பள்ள
வயல்பாயு நீர்போல மானன்னாள் மைக்கட்
கயல்பாயு முள்ளப்புட் காணுஞ்—செயல்பாயுஞ்
செந்தா மரையிரண்டுஞ் செம்மாக்குஞ் சென்றுதவா
நந்தா மரையிரண்டு நாணியழுந்—தந்தாயைக்

கண்டுவக்குஞ் சேய்போலக் காரிகையு மந்நிரையைக்
கண்டுவக்கு மூக்குங் கருத்துப்பும்—வண்டுவக்குங்
கூந்தலினா ளிவ்வாறு கொள்ளுங் குறிப்புடைய
ஏந்தலினா லாவதனுக் கேகுவாம்—தீந்துவர்வாய்க்
கிள்ளையின மாவலுடன் கேட்குந் தமிழ்வாயாள்
அள்ளியிசை யோரேழு மாராய்வாள்—உள்ளுவந்து

காட்டூரி லேபாடுங் கன்னித் தமிழ்கேட்கும்
மேட்டூரி லேவாழு மேவலான்—காட்டாரு
மில்லா துயர்ந்த விளமை நலனுடையான்
செல்லா துயர்ந்த திறலுடையான்—மல்லாருங்

---

416 கள்ளம் - களவு. 418 செயல்பாயும் - தேய்த்துக் கொண்டிருக்கின்ற. 419 செந்தாமரையிரண்டு – கால்கள். செம்மாத்தல் - செருக்குக் கொள்ளுதல். 420 நந்தாமரை – கைகள். தம்மால் உதவி செய்ய முடியாமைக்கு நாணியழும். 428 மேவலான் - விரும்பத் தக்கவன். 430 செல்லாது - நீங்காது. மல் ஆரும்- வலி பொருந்திய.

கட்டுடம்பு நோயெதுவுங் காணு நலமிகுதி
பட்டுடம்பு மேவியநற் பாக்கியத்தான்—சுட்டுடைய

நல்ல வுயரம் நயத்தக்க நற்பருமன்
எல்ல வருமுவக்கு மின்னுருவன்—வல்லவரி
வண்டார் விரும்புமண மாண்புடைய மேனியினன்
கண்டார் விரும்புமெழிற் கட்டழகன்—தண்டாத
அன்பு பொருந்தி யருள்விரவி யாராத
தென்பு கலந்து தெருள்மருவி—யின்பளவிப்

பொற்புறவே நோக்கும் புலிப்பார்வை, காண்போரன்
பெற்புறவே யூக்கு மிதழ்ப்பொலிவு—தற்பெறவே
மூக்குக்குக் காப்பாய் முளைத்து முறுக்கியெழும்
போக்குக்குக் காப்பாய்ப் பொலிமீசை—நோக்குக்குத்
தாங்கரிய தாய்க்குணக்கிற் றண்ணென் றினிதெழூஉ
மீர்ங்கதிர் போன்றவரி யேறுமுகம்—பூங்குறிஞ்சி

---

431 - 2 நலம் மிகுதிபட்டு உடம்பு மேவிய - நலம் மிகுந்த உடம்பு பொருந்திய. சுட்டுடைய- சுட்டிக் காட்டக்கூடிய. 434 வரிவல்ல - இசையில் வல்ல. 438 தெருள் - தெளிவு. 440 எற்பு - எலும்பு. அன்பு என்பு உற - அன்பு எலும்புக்குள் செல்ல, அன்புமிக. 'தன்' என்றது மீசையை. தன் பெறவே முளைத்து -தன்னை மூக்குக் காப்பாகப் பெற முளைத்து. 441 - 2 மூக்குக்குக் காப்பு - மூக்களவுள்ளது. முறுக்கி எழும் போக்குக்குக் காப்பு - முறுக்கி யெழாமல் நறுக்கி விடப்பட்டது. மூக்களவு நறுக்கி விட்ட மீசை. 443 குணக்கு - கிழக்கு. 444 ஈர்ங்கதிர் - குளிர்ச்சியான இளஞ்சூரியன். அரியேறு - சிங்கம்.

வண்டரினங் கண்டு மயங்க மதிசூடுங்
கொண்டலெனத் தோன்றுங் குறுங்குஞ்சி—
தண்டமிழில்
தானாய்ந்து **நல்லதம்பிச் சர்க்கரை** யாக்குவித்த
கானார்ந்த **காங்கயங் காளை**யன்னான்—மீனார்ந்த
விண்ணென் றுயர்ந்து விரிந்து செறிந்தாழ்ந்து
தண்ணென் றுயர்ந்த தமிழ்வாயான்—கண்ணொன்று

450

பெற்றுத் தெளிந்த பெரும்புலவர் பானன்கு
கற்றுத் தெளிந்த கலைவல்லான்—முற்றித்த
பல்காப் பியத்தின் பயனடைந்தான் பாரித்த
தொல்காப் பியத்தின் றுறைபடிந்தான்—நல்காப்ப
உள்ளுவ தெல்லா மொருங்கு தலைப்பெய்த
வள்ளுவர்முப் பாலை வகையுண்டான்—தெள்ளுகலைத்

456

திட்டமது முற்றுவந்த தேர்ந்துதெளி கல்லூரிப்
பட்டமது பெற்றுயர்ந்த பார்வல்லான்—வெட்டவெளி

---

444 - 6 குறிஞ்சி - மலை. கொண்டல் - மேகம். குறுங் குஞ்சி – கிராப்பு. பழந்தமிழரின் குஞ்சியைக் குறைத்ததே இன்றையக் கிராப்பாகும். மலைமேல் மதி, மதிமேல் முகில் - தலைவன் உடல் முகம் குறுங்குஞ்சிக் குவமை. முகத்தை மலரென்று வண்டுகள் மயங்கின. 446-8 நல்லதம்பிச் சர்க்கரை என்பவர் பழைய கோட்டைப் பட்டக்காரர். இவர் தானாக நன்கு ஆராய்ந்து கலப்பு முறையால் உண்டாக்கியவையே உலகப் புகழ்பெற்ற அழகிய காங்கய மாடுகள். 452 முற்றித்த - முழுமையும். 454 நல்காப்ப - நன்மையைக் காக்க. 457 முற்றுவந்த - முற்றிய. 458 பார்வல்லான் - ஆராய்ச்சி வல்லான்.

போன்ற செயலுடையான் பொய்யாத
[சொல்லுடையான்
ஆன்ற நலஞ்சே ரகமுடையான்—சான்றவர்கள்
மெச்சுந் தகவுடையான் வேண்டுவர்வேண் டாரின்றி
நச்சுந் தகவதினு நன்குடையான்—எச்சரிக்கை
யின்றியொரு செய்தியினு மீடுபடான் ஏலார்க்கும்
நன்றிபய வாதசெய நாணுடையான்—பொன்றினுமே
புன்மதிப்புக் காகவுயிர் போலச் சிறந்துயர்ந்த
தன்மதிப்புக் கேலாத தான்செய்யான்—தன்மதிப்பை
விற்போர்க்குக் கெட்டித்த வேம்பன்னான் நன்மதிப்பைக்
கற்போர்க்குக் கட்டிக் கரும்பன்னான்—முற்போக்
குடையான் பகுத்தறிவுக் கொவ்வாத செய்தல்
கிடையான் பெரியார்சொற் கேட்பான்—நடையேதுங்
குன்ருன் குறளையர்சொற் கொள்ளான் மனஞ்சிறிதுங்
கன்ருன் வராதவந்து கையுறினும்—நன்ருகு
மாக்கம் பெரிதெனினு மான்ருேர் பழிக்குவன
நோக்கம் படவகத்து நோக்ககில்லான்—மீக்கொள்ளுங்
கல்விச் செருக்கில்லான் கைநிறைய வுண்டெனினுஞ்
செல்வச் செருக்குச் சிறிதுமிலான்—பல்வகைய
தேட்டாளர் நாணுஞ் சிறந்த முயலுடையான்
ஈட்டாத பல்வே றியல்புடையான்—பாட்டாளர்
உள்ளங் குடிகொண்ட வோயா வுழைப்புடையான்
கள்ளங் கரவற்ற கண்ணியவான்—எள்ளுவன

467 கெட்டித்த - மிக்க. 470 நடை - ஒழுக்கம்.

செய்யான் கனவிலுமே தீண்டான் பிறர்பொருளை
வய்யா னொருவரையும் வாய்திறந்து—மெய்யார்சொற்
றட்டா னறிவிலரைத் தாழான் கடிந்தெவருங்
கெட்டா னெனும்பழிச்சொற் கேளாஅன்—கிட்டாத
எண்ணு னெளியவரை யெள்ளா னிழிதகவு
நண்ணுன் பயனிலதை நாடாஅன்—கண்ணுரக்

கண்டதையில் லென்னுத காட்சியுளான் றன்னறிவுட்
கொண்டதையா ராய்ந்துசெயுங் கொள்கையுளான்—
[தண்டமிழர்
முன்னு மரிய முயற்சியெலா மொன்ருக
உன்னு மரிய வுயர்வுடையான்—மன்னுதிரு
வள்ளுவர் வாய்மொழிக்கு வாய்த்தவெடுத்துக்காட்டாக்
கொள்ளுமுயர் பண்பெல்லாங் கூடியவன்—கள்ளவியல்

பைந்துடையான் காத லமைந்திலக வாண்டிருபத்
தைந்துடையா னின்ப மலர்தரவ—மைந்துடையான்
ஒத்த பருவ முருவமுத லொப்புடைமை
பத்து மொருங்கமையாண் பாலுடையான்—பத்துடை
காதற் கருங்குவளை கண்டு மலரவிருள் [யாள்
போதப் புகுந்த புதுமதிபோல்—மேதக்கான்

---

492-3 கள்ள இயல்பு ஐந்து-புணர்தல் முதலிய உரிப்பொருள் ஐந்து. 495-6 ஒப்புவமை பத்து - தொல் காப்பிய மெய்ப்பாட்டியல் சூ. 25-ல் காண்க.

நோயிடைய வேயுதவி நோக்கியெதிர் நின்றாளை
ஆயிடைகண் டுள்ளமுவந் தான்.

## 6. எதிர்ப்பாடு

ஆயிடைகண் டுள்ளமுவந் தானங் கணுகணுக
நோயடைய நின்றாளு நோக்கநிலம்—தாயடைய
இன்புற்ற சேயை யினியுவமை சொல்லுதலோ
அன்புற்ற காதல்வழக் கன்மையால்—முன்புற்ற

கார்கண்ட மஞ்ஞையெனக் கால்கண்ட வேலையென
நீர்கண்ட பைங்கூழ் நிலமென்னத்—தார்கண்ட
கூந்தலென வந்நின்ற கோற்றொடியுந் தன்னோயை
ஏந்தலறி யக்குறிப்பா லேயுணர்த்தப்—போந்தவனும்
மற்றவள்நோய் போக்கி மலர்ந்த முகநோக்கிப்
பெற்றவள்பா லின்னினிய பேசுவான்—பொற்றொடீஇ!

நானிலத்தை வாழ்விக்க நன்னோக் குடனுகந்து
மேனிலத்தி லேபோந்த மெய்யறிவர்—வானிலத்து
மின்னலையை மண்ணகத்து மேய வரும்பொருளைப்
பொன்னுலையி லேயுருக்கிப் பொற்புடனே—பன்னரிய

---

499 இடைய - நீங்க. 505 மஞ்ஞை - மயில். வேலை - கடல். 506 பைங்கூழ் - பயிர். 510 பெற்றவள் - அன்புக்குரியவளாகப் பெற்றவள். தார் - பூ. 512 மேனிலம் - மேல்நாடு. மெய்யறிவர் - விஞ்ஞானிகள். 513 மின் அலை - மின்சார இயக்கம். 514 பொன் - உலோகம்.

வானேயும் பல்பொருளை வட்டித் திடநமக்குத்
தானுயு மாராய்ச்சிச் சாலையென—மானேயுன்
516
செம்பொன் னடித்தளிரைத் தேர்ந்தெடுத்த வோவிவை
[யும்
அம்பொன் னடிக்கெதிர்மை யாவதனைத்—தெம்புடனே
ஆய்ந்தாய்ந்து கண்டறிய வாகாமை யாலுடல
மோய்ந்தோய்ந்து மேன்மேலு மூக்கினவோ—
[சேந்தோய்ந்து
போயசெந் தாமரையின் பொற்பிணைக்கா ணக்காண
ஆயதோ காத லவைக்கதிகஞ்—சேயிழையுன்
522
தீராத மென்மலரின் செம்மைத் திறங்கண்டால்
ஆராத காதலுரு ராருலகிற்—பேராத
அன்பா லவைதம் அழகிய கூர்முகத்தால்
இன்பாய்ப் பலமுத்த மிட்டனவோ—தென்போடு
நன்முறையி லேயமைநின் னல்லடியின் மென்மையினைப்
பன்முறைதொட் டுத்தொட்டுப் பார்த்தனவோ—பின்
[முறையும்
528
முற்றுந் தெரியாமல் மொய்ம்புட னேமுனைந்து
மற்றுந் தெரிதரக்கை வைத்தனவோ—முற்றிழையுன்
தண்டமிழின் கூத்தைச் சரியாக வுள்ளபடி
கண்டுகொள நின்காலைக் கட்டினவோ-ஒண்டொடியுன்

---

515 வானேயும் - உயர்ந்த, சிறந்த. வட்டித்திட- உதவ. 517 இவை - நெருஞ்சி முட்கள். 520 சேந்து - சிவந்து. 521 செந்தாமரை - அடி. 529 மொய்ம்பு - வலிமை.

நல்ல நடிப்பின் நலப்பட்டு நல்லடியைப்
புல்லி விடாதுநின்று போற்றினவோ—மெல்லியலாள்

நின்னை யெதிர்ப்படவே நீபோகா தேயிருக்க
உன்னை நிறுத்திவைத்த வோகாணும்—முன்னையவர்
காணாத வாயிலிது காணுங் களவியலில்
வீணோதி னல்மறுத்தல் மேவுமன்றோ—நாணாது
காவியங் கண்ணிநீ கைவல்லோன் தீட்டியநல்
லோவியம் போலயா னுன்னுடம்பை—நீவுமட்டும்

இம்மென்றெ தேனு மிடையூறு செய்யாமற்
கம்மென்றி ருந்ததன்மெய்க் காரணமென்—உம்மென்று
மெய்தொட்ட போதன்று வேல்விழியுன் மெல்லியசெங்
கய்தொட்ட அவ்வடுவைக் காண்டியால்—நெய்தொட்ட
அய்ம்பாலை நீவியதற் காகச் சினந்தன்று
கொம்பேறி நாகமெனக் கொத்தினையே—வம்பாருங்

537 வாயில் - தூது, உதவி. களவியலில் பார்ப்பான், பாங்கன், தோழி முதலிய வாயில்கள் உண்டேயன்றி நெருஞ்சிப்பழ வாயில் இல்லை. 538 ஓதினல் வீண் மறுத்தல் மேவும் - வாயில் வேண்டினல் மறுக்கவுங் கூடும். அதனல்தான் இவை நில் என்று சொல்லாமல் நின் காலில் தைத்து உன்னை இங்கேயே நிறுத்தின என்பதாம். 541 இம்மென்று - கொஞ்சங்கூட. 542 கம்மென்று—சும்மா. 511 'நானிலத்தை என்பது முதல் 542 'காரணமென்' என்பது வரை நெருஞ்சிப் பழத்தின் செயல். இனி 543 முதல் 574 வரை இயற்கைப் புணர்ச்சியில் நிகழ்ந்தன கூறுகின்றான். 542 உம்-ஒலிக் குறிப்பு. 544 வடு - தழும்பு. 546 வம்பு – மணம்.

கூந்தலை மோந்ததனாற் கொம்பனையா யன்றுனது
மாந்தளிர் சோர்ந்தயர்ந்து வாடினதே—ஏந்திழையான்
மண்குத்திப் பூம்பள்ளி வண்ணமுறப் பண்ணுகையில்
கண்குத்திப் பாம்பென்னக் கண்டனையே—பண்குத்தி!
என்முறுவல் பார்த்தோ ரிளங்கொம்பர் நின்போலப்
புன்முறுவல் பூத்துப் பொலிந்ததன்றோ—தென்மொழி யுன்

552

தத்தரிக்கண் காணவெதிர் தான்வரயா னின்னுதலும்
முத்தெடுத்து மாணவன்று மூடினதே—பத்தடுத்த
ஆன்றோரைப் போல வடக்கமுடன் வாய்முத்தந்
தோன்றாமற் செம்பவளந் தோன்றினதே—சான்றேயுங்
கட்டழகி யுன்னுளத்தைக் காட்டிலைநீ யுன்னுடம்பு
வெட்ட வெளியாக்கி விட்டதன்றோ!—கிட்டவந்துன்

558

தொய்யி லெழுதியமென் றோள்தொடவுன் மென்குழலும்
ஒய்யென வேயவீழ்ந்தன் றொல்கினதே—பையெனவுன்
தாதுபட்ட மேனி தடவவுன்றன் பொற்றோடு
காதைவிட்டே யோடினதே காதவழி—மாதரசென்

---

548 மாந்தளிர்-உடம்பு. 550 பண் குத்தி-பண்ணைக் குத்தும் சொல்லையுடையவளே. 551 முறுவல் - புன் சிரிப்பு. 552 புன்முறுவல் - புன் சிரிப்பு. 553 தத்து அரி - அடர்ந்த வரி. 554 மாண - நன்கு. பத்தடுத்த - மிகச் சிறந்த. 555 முத்தம் - பல். 556 பவளம் - இதழ். சான்றேயும் - எடுத்துக் காட்டத் தக்க. 559 தொய்யில் - தோளில் எழுதும் கோலம். 560 ஒல்குதல்- சுருங்குதல். பையென - மெதுவாக. 561 தாது - பூந்தாது. தாதுபட்ட மேனி - பூந்தாது போல இயற்கை மணமுடைய உடம்பு.

கண்ணில் விழுந்தவுன்மேற் கைபடவுன் கைவளைகள்
மண்ணில் விழுந்துடைந்து மாண்டனவே—பண்ணரிய

564

பாவையுந்தன் பொற்றுகிலைப் பாங்கா யுடுத்துடுத்துப்
பூவையுந்தன் கையோய்ந்து போயினவே—காவியங்
[கண்!
நின்னுடைய மேனிதொட நேர்ந்தெழுந்துன்
பட்டாடை
உன்னிடையை விட்டெங்கோ வோடினதே
—என்னுடைய
பூவாடைக் காரியுடை போலவிடை யைப்பகைக்கப்
பாவாடைக் காரிடுக்கண் பண்ணினவர்—நாவாடச்

570

சொற்போர் புரிந்தெவர்க்குந் தோலாத வென்னோடு
மற்போர் புரிந்துவென்ற மாமறத்தி—பிற்பாடுன்
கைபட்ட பாட்டைக் கழறிலுன்றன் காமருபூ
மெய்பட்ட பாட்டைவிட மேலாமே—எய்பட்ட

---

573 காமருபூ மெய்யும் இது. 566 காவி - குவளை. 567 நேர்தல் - உடன்படுதல். 570 நா ஆட - நா வெல்ல; நாவாட - பிறர் நாவாட. 551 முதல் 574 வரை முறையே புகுமுகம் புரிதல், பொறிநுதல் வியர்த்தல், நகுநய மறைத்தல், சிதைவு பிறர்க்கின்மை, கூழை விரித்தல், காதொன்று களைதல், ஊழணி தைவரல், உடை பெயர்த்துடுத்தல், அல்குல் தைவரல், அணிந் தவை திருத்தல், இல்வலியுறுத்தல், இருகையு மெடுத் தல் என்னும் மெய்ப்பாட்டுக் குறிப்புக்கள் (தொல். மெய்ப். 13, 14, 15) பன்னிரண்டும் வந்துள்ளமை காண்க. 574 எய் - அம்பு.

தோகை மயில்போலச் சோருநினைத் தெம்புடைமை
யாக வுதவுதலிங் கார்கடமை ?—பாகுமொழி !

கையின் கடமையன்றே காரிகைநிற் காணுதற்கக்
கையின் கடமை கழிந்திடுமோ ?—பையவன்று
நாற்று நடுகையிலே நான்வீச வேதவறி
நாற்று நடுகையிலே நாண்மலர்போல்—நாற்று
முடிபடவே தான்வெறுத்த மொய்குழலே! யின்றுன்
அடிபடவே யான்பொறுத்தே னன்றே ?—நொடி
[படவான்

கன்றின் தலைக்கயிற்றைக் காணும லேமிதிப்பக்
கன்றின் குரலன்று காட்டினையே—அன்றொருநாட்
கீரை பறிக்கையிலே கிட்டிவர வேயண்ணன்
மாரை யழைத்தேங்க வைத்தனையே—கூரையின்மேற்
காக்கா வெனக்காக்கை கண்டதுமே பைங்கிள்ளை
வாக்கா வெனவெளியே வந்தென்னை—நோக்கா

விருந்தானே னென்பதனை வேம்பென்று யன்று
மருந்தானேன் போலின்று மன்ற—திருந்தாத

---

577-8 கை அவளுக்குதவாமையும் தனக்குதவினமையும் கூறுகின்றான். 579 முதல் 610 வரை களவொழுக்க நிகழ்ச்சிகள். 580 நடுகையிலே - நடுகின்ற கையிலே. 582 அடிபடல் - காலைப் பிடித்து முட் பிடுங்குதல். நொடிபட - தடையுண்டாக; தடம் மேடு பள்ளமாக - நொடியாக. 584 கன்றின் குரல் - அம்மா. 588 நோக்கா - நோக்கி. 589 தாய் விருந்திடலாமெனத் தலைவி மறுத்தாள். 590 மன்ற - உறுதியாக.

செங்கோல் மறமன்னர் செல்வம்போற் பெண் [ணொருத்தி
வெங்கோலங் கொள்ளுவது வீணன்றே ?— பைங்கூழ்க்
களைகளைய வென்றலையைக் காண்டலுமே முன்கை
வளைகளைய மன்றறிய வைத்தாய்—இளைகளைய

அவ்வண்ணந் தண்ணிலவி லாடையிலே நீசெய்த
இவ்வண்ணந் தன்னைமற வேனென்றுஞ்-செவ்வண்ணக்
குன்று குளிரக் கொழுங்கொண்டல் பெய்வதுபோல்
ஒன்றுபெய் துள்ள முவப்பித்தாய்—அன்று
பருத்தி பறிக்கையிலே பார்த்துப்பார்த் தென்னை
வருத்தி யுடல்நலிய வைத்தாய்—ஒருத்தி

பறிக்கையிலே வாவென்று பார்வையிலே குட்டி
மறிக்கையிலே சொன்ன மயிலே—முறிக்கையிலே
தீண்டி யெதனாலுந் தீராத நோய்தீர
வேண்டி மருந்தளித்த மெல்லியலே !—ஆண்டொருநாள்

---

592 வெங்கோலம் - தலைவனை வருத்தி அவனுக்குப் பயன் படாததால் 'வெங்கோலம்' என்றான். கோலம் - அலங்காரம். பைங்கூழ் - பயிர். 594 மன்று - களைகளைந்த மற்றைப் பெண்டிர். இளை-உடல் இளைப்பு. 595 அவ்வண்ணம்-அவ்வாறு. 596 இவ்வண்ணம்-இக்குறி. 598 ஒன்று-ஓரடி. விளையாடும்போது தலைவி தலைவனை விளையாட்டடி யடித்தாள். 601-2 குட்டி-ஆட்டுக்குட்டி. மறித்தல்- தடுத்தல். பார்வை - கண்ணின்குறி. பார்வையிலே சொன்ன மயில் என்க. முறி-தளிர்.

தாய்துஞ்ச வில்லையெனச் சாற்றியே மாற்றினைபின்
நாய்துஞ்ச வில்லையென நாப்பிழைத்தாய்—வாய்துஞ்சப்

606

பொய்ப்புள் ளொலிகேட்டுப் பொம்மெனவந் தேமாந்து
கைப்புள்ள திட்டுக் கலுழ்ந்தகன்றாய்—மெய்ப்புள்ள
அற்றம் பிழைத்துன்னை யல்லாக்கச் செய்தவென்றன்
குற்றம் பொறுத்தகுணக் குன்றன்னாய்!—மற்றொருகால்
நந்தமிழர் முன்வாழ்ந்த நாகரிக நல்வாழ்வை
எந்தமிழர் காண வெடுத்துரைக்கப்—பைந்தொடிநம்

612

தண்டமிழ்நாட் டூர்தோறுந் தான்சென்ற காலத்தே
வண்டமிழைத் தான்பிரிந்த வர்றேபோல்—
ஒண்டொடிநீ
எத்தியா யில்லாம லென்பிரி வாற்றாது
பித்தியா யுள்ளமது பேதுறவே—கத்தியாய்

---

606 நாப்பிழைத்தல் - பொய். வாய் - உண்மை. வாய்துஞ்ச - உண்மையின்றாக. 607-8 புள் - பறவை. பொய்ப்புள் - தலைவனெழுப்பாது தானாக எழுந்து ஒலிசெய்த பறவை. பொம்மென - மகிழ்ச்சியாக. கைப்புள்-வளையல். வந்து போனதற்கு அடையாளமாக வளையலை இட்டு. கலுழ்ச்சி-வருத்தம். மெய்ப்பு உள்ள-உண்மையான. 609 அற்றம்-குறித்தகாலம். அல்லாக்க-வருந்த. பொய்ப்புள்ளொலி, அற்றம்பிழைத்தல். இவை யிரண்டும் குறிபிழைத்தல். 610-3 பொது நலப்பிரிவு. 615 எத்தி-ஏமாற்றுக்காரி. 616 பேதுற-மன மயக்கங் கொள்ள. ஆய்கத்தி-தாய் பலவாறு அரற்றி.

நோய்பிடித்த காரணத்தை நோக்கி யறியாது
பேய்பிடித்த தென்றுமனம் பேதுற்று—ஞாய்பிடித்த

618

அன்பாலுன் னேயகல அவ்வுடுக்கைக் காரரைக்கொண்
டுன்பா லிருந்தபே யோட்டுவிக்கத்—தென்பாலின்
வன்மையறி யாத வடவர் முடித்தலையில்
இன்மையுற வன்ன ரிகழ்வெண்ணம்—நன்மையுறக்
கட்டுவன்போற் பத்தினியின் கல்லேற்றிக் கொண்டு [வந்த
குட்டுவன்போற் பைந்தொடியுன் கூந்தலின்மேற்
—பட்டுவரிக்

624

கல்லேற்றி யச்சுறுத்திக் காட்டியும்போ காதப்பேய்
சொல்லேற்றி யான்வரவே தொண்டொருநாள்— [வில்லேற்றி
வந்திளஞ் சேட்சென்னி வாள்வலிக்காற் றுவடவர்
தந்திர ளோடினபோற் றுன்னேடச்—செந்துவர்

---

618-9 ஞாய்-தாய். பிடித்த அன்பு-கொண்ட அன்பு. 620 தென்பால்-தமிழ்நாடு. இங்கே தமிழர். 621 வடவர்-கனகவிசயர். 622 இகழ்வு எண்ணம் இன்மையுற. 622-3 உறக்கட்டல் - பொருந்தச் செய்தல். 624 பட்டு வரிக்கல்-உளியடிக்கல். 626 தொண்டு-பண்டு, முன்பு. 627-8 திரள்-கூட்டம். தமிழகத்தின் மேல் படையெடுத்து வந்த வடவராகிய மோரியரை (பிந்துசாரன்) இளஞ் சேட் சென்னி என்னும் சோழ மன்னன் முறியடித்தோட்டினான்.

வாய்ச்சி! யறிந்து மகிழ்ந்தேனுன் உள்ளன்பை
ஆய்ச்சி யறியுமோ வப்பொருளை?—பேய்ச்சி!

630

உளவியலின் றன்மையெலா மொப்ப வமைந்த
களவியலின் தன்மையெலாங் கண்டார்—களவமையப்
பூவும் புனலும் பொருகளிறுஞ் செந்நாயும்
ஆவுந் தருபுணர்ச்சி யாமென்பர்—கோவையிதழ்ப்
பாவாய்! நெருஞ்சிப் பழந்தரு மிப்புணர்ச்சி
பூவாய்! நமது புதுப்புணர்ச்சி—மேவாக

636

---

630 ஆய்ச்சி-தாய். பேய்ச்சி-பேய் பிடித்தவளெனப் பெயர் பெற்றவள். 615-28 தலைவன் பிரிவாற்ருது தலைவி பேதுற்று வருந்த, தாய் பேய் பிடித்ததென்று உடுக்கைக்காரரைக் கொண்டு பேயோட்டு வித்தாள். அவர்கள் எவ்வளவோ முயன்றும் போகாத அப்பேய் தலைவன்வரத் தானுகவே ஓடிவிட்டது. பேய்-அச்சம். பெண்களின் காதல் நோயைப் பேய் பிடித்ததெனக் கொள்ளுதல் மகளிர் வழக்கம். செங்குட்டுவன் கனக விசயர் முடித்தலையில் கண்ணகியின் படிமக்கல் ஏற்றி வந்ததுபோல் தலையில் கல்லேற்றி அச்சுறுத்தியும் போகாது, தலைவன் வரவே, இளஞ்சேட் சென்னியைக் கண்டு வடவரான மோரியர் ஓடினது போல் அப்பேய் ஓடிற்று என்பதாம். 632 களவு அமைய-களவு வெளிப் பட. 633-4 இவை பூத்தரு புணர்ச்சி, புனல்தரு புணர்ச்சி, களிறுதரு புணர்ச்சி, நாய்தரு புணர்ச்சி, ஆத்தரு புணர்ச்சி எனப்படும். 636 மேவு ஆக-பொருந்த.

அன்னைக் கிதனை யறத்தொடு நிற்பாய்காண்
என்னப் பணிமொழியு மிம்மென்ன—என்னுயிரே !
இவ்வா றெதிர்பாரா தேநிகழ்வ தையேதான்
ஒவ்வாத வூழென்ற தொண்குறளில்—அவ்வாறே
இன்றெதிர்ப் பட்டோ மெனநடந்தாள் ; எந்தமிழர்
அன்றெதிர்ப் பட்டதிது வாம்.

642

---

638 இம் என்ன - சரியென. 640 ஒவ்வாத - பொருந்தாத; மக்கள் எண்ணம் செயலுக் கொவ்வாத. 641-2 எந்தமிழர்-தலைவனும் தலைவியும்; பழந்தமிழர். அன்று எதிர்ப்பட்டது - களவொழுக்கம்.

---

